18th March 1961]

THE HON. SRI C. SUBRAMANIAM: கனம் அங்கத்தினர் சொல்லுவது, "டைவர்ஷிபைடு கோர்ஷில்" விவசாயப் பகுதி ஆரம்பிப்பதற்கு நிலம் கொடுப்பதைச் சொல்லுகிறார்கள். எங்கு விவசாயப் பகுதி ஆரம்பிக்கப்பட்டிருக்கிறதோ அங்கெல்லாம் நிலம் கொடுக்கப்படுகிறது.

*Harijan Colonies (street lights)*

* 895 Q.—SRI P. G. MANICKAM: கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) 1959-60-ல் ஹரிஜன காலனிகளில் உள்ள தெருக்களுக்கு மின்சார விளக்குகள் போடப்படுவதற்காக ஹரிஜன நல இலாகா மூலமாக ஒதுக்கப்பட்ட தொகையிலிருந்து எத்தனை விளக்குகள் போடப்பட்டன ?

(இ) இதற்காக ஒதுக்கப்பட்ட தொகையிலே செலவழிக்கப்பட்ட தொகை எவ்வளவு ?

THE HON. SRI V. RAMAIAH: (a) & (b) The attention of the hon. Member is invited to the answer [a] placed on the table of the House.

SRI P. G. MANICKAM: வருஷந்தோறும் சுமார் 1,000-க்கு மேற்பட்ட கிராமங்களுக்கு சர்க்காரே மின்சார வசதி செய்து கொடுக்கிறது. ஹரிஜன வெல்பேர் பண்டுக்கு சுமார் ஒரு லட்ச ரூபாய் கொடுப்பதன் மூலம் மேற்கண்ட 1,000 கிராமங்களிலுள்ள ஹரிஜன தெருக்களுக்கு விளக்குப் போடுவதற்கு அந்தத் தொகை போதாது. சர்க்காரால் எந்தெந்தக் கிராமங்களுக்கு மின்சாரம் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறதோ அந்த கிராமங்களிலுள்ள ஹரிஜன தெருக்களுக்கும் மின்சார விளக்குப் போட வேண்டும் என்று உத்தரவிட்டிருக்கிறார்கள். ஆனால் ஒதுக்கப்பட்ட தொகை போதாமல் இருக்கிறது. சர்க்கார் இதை கவனித்து ஹரிஜன நல பண்டுக்கு மேலும் அதிகமான தொகை ஒதுக்கும்படி உத்தரவிடுவார்களா ?

MR. SPEAKER: இப்படி நீளமாய் கேள்வி கேட்டால் என்ன செய்வது? இதைப் பற்றி எல்லாம் ஹரிஜன மானியக் கோரிக்கையின் பேரில் விவாதம் நடந்தபோது பேசியிருக்கலாம். ஆனால் கனம் மந்திரி அவர்கள் பதில் சொல்லுவதாயிருந்தால் சொல்லட்டும்.

THE HON. SRI V. RAMAIAH: ஹரிஜன காலனிகளுக்கு மின்சார விஸ்தரிப்பு செய்வது சம்பந்தமாக நான் ஏற்கனவே விவரமாக பதில் சொல்லியிருக்கிறேன். என்னுடைய பதிலிலும் விவரம் கூறப்பட்டிருக்கிறது. எங்கெங்கே மின்சார விஸ்தரிப்பு நடக்கிறதோ, அந்த ஊர்களிலெல்லாம் ஹரிஜன காலனி பக்கத்தில் இருந்தால், அதையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். அங்குள்ள ஹரிஜன காலனிக்கும் மின்சார விஸ்தரிப்புக்கு இடம் இருந்தால் தான் அந்தக் கிராமத்திற்கு மின்சாரம் போகும். இல்லாவிட்டால் அந்தக் கிராமத்தில் மின்சார விஸ்தரிப்பு வேலை நடைபெறாது. 1,000, 1,500 கிராமங்களுக்கு நாம் மின்சார விஸ்தரிப்பு செய்தால், அந்த கிராமங்களிலுள்ள ஹரிஜன காலனிகளுக்கும் மின்சாரம் விஸ்தரிக்கப்படுவதற்கு அந்தத் திட்டத்தில் இடம் இருக்க வேண்டும். இது மாதிரி நாம் எடுத்துக்கொண்ட முடிவுக்கு முன்பு எந்தெந்த ஊர்களில் மின்சார விஸ்தரிப்பு நடந்ததோ, அங்கே ஹரிஜன காலனிகள் மின்சார விஸ்தரிப்பு செய்யப்படாமல் விடப்பட்டிருந்தால், அந்த ஹரிஜன காலனிகளுக்கு மின்சார விஸ்தரிப்பு செய்வதற்கு ரூ. 10 லட்சம், 12 லட்சம் வேண்டும் என்று அதிகாரிகள் சொன்னார்கள். அதற்காகத்தான் ஹரிஜன நல இலாகா விசேஷ மானியம் கோருகிறது. அதற்காகத்தான் இப்பொழுது 'பேஸ்டு' புரோகிராம் போட்டு, வருஷம் ஒன்றுக்கு ஹரிஜன நல இலாகாவிற்கு ரூ. 1 லட்சம், 2 லட்சம் என்று ஒதுக்கிக் கொடுக்கிறோம்.

SRI P. G. MANICKAM: தற்பொழுது ஒதுக்கப்பட்டு இருக்கும் ஒரு லட்ச ரூபாய் கிராமங்களுக்கு மின்சார விளக்குப் போடப்படும்பொழுது, அங்குள்ள ஹரிஜன தெருக்களுக்கு விளக்குகள் போடுவ

[a] Printed as Appendix I on page 89 infra.

[18th March 1961

தற்குத்தான் சரியாக இருக்கும். ஆனால், இதுவரைக்கும் மின்சார விஸ்தரிப்பு செய்யப்பட்ட மற்ற கிராமங்களில் ஹரிஜன தெருக்களுக்கு மின்சாரம் போடப்படாமல் இருக்கிறது. இதை சர்க்கார் கவனித்து இந்தத் தொகையை அதிகரிப்பதற்கு சிபார்சு செய்யுமா ?

THE HON. SRI V. RAMAIAH : நான் சொன்ன பதிலை கனம் அங்கத்தினர் அவர்கள் ஏற்றுக்கொள்ள மறுத்தால் நான் வேறு பதில் சொல்ல முடியாது, நான் என்ன பதில் சொன்னேன் என்றால், புதியதாக கிராமங்களுக்கு மின்சாரம் விஸ்தரிக்கப்படும்பொழுது அந்தத் திட்டத்தில் அங்கேயுள்ள ஹரிஜன காலனிகள் கண்டிப்பாக சேர்க்கப்பட வேண்டும் என்பது. அதற்கு ஹரிஜன நல இலாகாவிலிருந்து எந்தவிதமான விசேஷ மானியமும் எதிர்பார்க்கவில்லை. மூன்று வருஷங்களுக்கு முன்னால் மின்சார விளக்குகள் போடப்பட்ட கிராமங்களில் ஹரிஜன காலனிகளுக்கு மின்சாரம் போடுவதற்கு விடப்பட்டிருந்தால், அதற்குத்தான் இந்த ஹரிஜன நல இலாகாவுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் விசேஷ மானியம் பயன்படுத்தப்படுகிறது.

SRI M. K. SOMASUNDARAM : ஹரிஜன காலனிகளுக்கு லைட் போடுவதற்காக ஒரு லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருப்பதாகத் தெரியவருகிறது. அந்த ஒரு லட்ச ரூபாய் மாகாண ரீதியாக பொதுவிலே வைக்கப்பட்டிருப்பதால், ஜில்லாவாரியாக பிரித்துக் கொடுக்காத காரணத்தினால் கிராமங்களுக்கு மின்சார விளக்குகள் போடுவதில் தாமதம் ஏற்படுகிறது என்று பிளாக் டெவலப்மெண்டு மீடிங்கில் சொல்லப்படுகிறது. அப்படியானால் இந்த ரூபாயை ஜில்லாவாரியாகப் பிரித்துக்கொடுத்து, இந்த வேலைகளைச் சீக்கிரம் நடைபெறச் செய்வதற்கு அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI V. RAMAIAH : கனம் அங்கத்தினர் அவர்கள் தயவு செய்து மேஜையின் மீது வைத்திருக்கக் கூடிய பதிலை படித்துப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். வருஷ வாரியாக ஒதுக்கப்பட்ட தொகை பூராவும் செலவழிக்கப்பட்டிருக்கிறது. ஜில்லாவாரியாக, மாகாணவாரியாக பிரிப்பது என்பது கிடையாது.

SRI S. M. ANNAMALAI : சில பஞ்சாயத்து போர்டுகளிலே ஹரிஜன காலனிக்கு ஸ்கீம் போட்டு ரெம்யூனரேடிவ் ஸ்கீமாக இருந்த போதிலும் கூட, பஞ்சாயத்து போர்டுகள் அதனுடைய மெயின்டினன்ஸை ஏற்க முடியாது என்று சொல்லுகிறார்கள். ஜாதி ஹிந்துக்களுக்கு மின்சார விளக்கு இருந்தும், ஹரிஜன காலனிகளில் மின்சார விளக்குகளை மெயின்டைன் செய்ய முடியாது, என்று ஜாதி வித்தியாசத்தை வைத்துக்கொண்டு சொல்லுகிறார்கள். அதைப் பற்றி சர்க்கார் கொள்கை என்ன ? பஞ்சாயத்து போர்டுகள் ஹரிஜன காலனிகளிலுள்ள விளக்குகளையும் மெயின்டைன் செய்ய வேண்டும் என்று சர்க்கார் வற்புறுத்த முடியுமா ?

THE HON. SRI V. RAMAIAH : இது போன்ற புகார்கள் என்னுடைய கவனத்திற்கு வரவில்லை. பஞ்சாயத்து போர்டு எல்லையில் இருக்க கூடிய ஹரிஜன காலனிகளுக்கும் மின்சார விஸ்தரிப்பு அளிக்கப்படவேண்டும். அவர்களுக்கு அதைப் போட முடியாவிட்டால்கூட, நாங்கள் இப்பொழுது உதவி கொடுக்கிறோம். புதிதாக எங்கு விஸ்தரிப்பு நடக்கிறதோ, அந்த ஊரிலுள்ள ஹரிஜன காலனிகளும் அந்த விஸ்தரிப்பிலே ஆரம்பத்திலேயே சேர்த்துக்கொள்ளப்படும். அதனால் ஒரு கஷ்டமும் ஏற்படாது.

*Department of the Archæology for the State*

* 899 Q.—SRI R. RANGANATHA MUDALIAR : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) whether the Government have any proposal to implement the policy of the Central Government that every State should have its own Department of Archæology; and